# தேவகோட்டை
# வித்துவான் நாகப்ப செட்டியார்



சேகரித்து தொகுத்தவர்

முல்லை பிஎல். முத்தையா






முல்லை
பதிப்பகம்
323/10, கதிரவன் காலனி,
அண்ணா நகர் மேற்கு,
சென்னை - 600 040

# முல்லை முத்தையா பெற்ற விருதுகளும் பட்டங்களும்

- ☐ பாவேந்தர் பாரதிதாசன் நூல்களை முதன்முதலில் அழகாகப் பதிப்பித்து வெளியிட்டதற்காக 1979-ல் எம்.ஜி.ஆர். தலைமையிலான தமிழக அரசு நடத்திய பாவேந்தர் விழாவில் கல்வி அமைச்சர் அரங்கநாயகம் அவர்கள் முல்லை முத்தையாவுக்கு பட்டாடை அணிவித்து ஆயிரம் ரூபாய் பரிசும் விருதும் அளித்தார்.

- ☐ 1978-ல் சாய் சர்வீஸஸ் நிறுவனத்தார் முல்லை முத்தையா உரை எழுதிய 'கந்தர் அலங்காரம்' நூலை கந்தசாமி கோயிலில் வெளியிட்டு, பட்டாடை அணிவித்து நிதி அளித்தனர்.

- ☐ 1982-ல் திராவிடர் கழக இலக்கிய அணி நடத்திய பாவேந்தர் விழாவில் தமிழர் தளபதி கி. வீரமணி தலைமையில் கலைஞர் கருணாநிதி சால்வை அணிவித்து பாராட்டி பேசினார்.

- ☐ 1985-ல் தமிழக அரசின் 'திருக்குறள் நெறி பரப்பு மையம்' நடத்திய விழாவில் முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம், திருக்குறளார் முனுசாமி தலைமையில் நிதிஅமைச்சர் நெடுஞ்செழியன் 'திருக்குறள் நெறித் தோன்றல்' என்ற பட்டம் வழங்கி கௌரவித்தார்.

# தேவகோட்டை
# வித்துவான் நாகப்ப செட்டியார்

○

[வாழ்க்கைக்குறிப்பு, பாடல்கள், கடிதங்கள், முதலியன]

○

சேகரித்து, தொகுத்தவர்:
**முல்லை பிஎல். முத்தையா**

○




**முல்லை**
**பதிப்பகம்**
323/10, கதிரவன் காலனி,
அண்ணா நகர் மேற்கு,
சென்னை - 600 040

ஜூலை-1997

ஸ்ரீ சுப்பிரமணியம் செட்டியார் என்னும்
வயி. கும. குப்பான் செட்டியார் எனக்
காரணப் பெயர் எய்திய

சுப்பிரமணிய குரு

[1862ல் குருபூஜை மடம் நிறுவியவர்]

↓

மகன்

வித்துவான் நாகப்ப செட்டியார்

↓

மகன்

பழநியப்பச் செட்டியார்

↓

மகன்

முல்லை பிஎல். முத்தையா

↓

மக்கள்

பழநியப்பன் M. A.,
இராமநாதன் B. A.,
கருப்பையா B. Com.,
மனோன்மணி B.Sc.,
கலா M L.I.S
உமா B L.I.S

30/3

# வித்துவான் நாகப்ப செட்டியார் அவர்களின் வாழ்க்கைக் குறிப்பு

செட்டிநாட்டு வட்டாரத்தைச் சேர்ந்த தேவகோட்டையில், கொரநாடு நாகப்ப செட்டியார் என்றாலும், வித்துவான் நாகப்ப செட்டியார் என்றாலும் நகரத்தார்கள் பெரும்பாலும் அறிவார்கள்.

மாயூரம் - கூறைநாட்டிலே, வித்துவான் நாகப்ப செட்டியார் தம் தந்தையாருடன் புடைவைக்கடையும், லேவாதேவிக்கடையும் நடத்தி வந்தார். [கூறைநாடு என்பதே தேவகோட்டையில் 'கொரநாடு' என்று மருவி வழங்கலாயிற்று.]

இளமையிலிருந்தே நாகப்ப செட்டியாருக்கு தமிழ் அறிவும், பாடல் இயற்றும் ஆற்றலும் இருந்திருக்கிறது. அந்தப் புலமை பல பாடல்கள் மூலம் தெரியவருகிறது.

நாகப்ப செட்டியார், எளிமையான உடை உடுத்திக் கொண்டு, அடக்கத்தோடு இருந்து வந்திருக்கிறார். அவர் எப்பொழுதும் எவரோடும் குறைவாகவே பேசுவார். கையில் ஏதாவது புத்தகம் இருந்து கொண்டே இருக்கும்.

அவர் தமிழ்ப் புலமையோடு சோதிட அறிவு, மருத்துவ ஞானம், இரத்தினப் பரிச்சயம் ஆகியவையும் பெற்றவர்.

நினைத்தபோது அவர் உடனே பென்சிலோ பேனாவோ எடுத்து வெண்பா இயற்றிவிடுவார். பல நிகழ்ச்சிகளில் பலர் கண்டு வியந்து, பாராட்டியுள்ளனர்.

வித்துவான் நாகப்ப செட்டியார் தேவகோட்டையில் இருந்த காலத்தில் அருகாமையில் வாழ்ந்து வந்த உலக

நாதபிள்ளை என்பவருடன் நெருங்கிய நட்புக்கொண்டிருந்தார். இருவரும் உள்ளூரில் அடுத்து அடுத்து இருந்த போதிலும், பாடல்கள் மூலமாகவே தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக்கொண்டிருந்தனர். துரதிர்ஷ்ட வசமாக அவை கிடைக்கவில்லை.

நான் பள்ளிக்கூடத்தில் அப்போது 'உலகநீதி' படித்துக் கொண்டிருந்தேன். அதை இயற்றிய உலகநாதர், இந்த உலகநாதபிள்ளையே என்று எண்ணியதும் உண்டு.

நாகப்ப செட்டியாருக்கு ஐந்து புதல்விகளும், ஒரு புதல்வரும் உண்டு. புதல்வர் பழநியப்ப செட்டியாரே என் தந்தை ஆவார். அவருக்கும் நான் ஒரே ஒரு புதல்வனே!

நாகப்ப செட்டியார் இறுதிக்காலத்தில் தம்முடைய செல்வத்தையும், இரத்தினங்களையும், ஆபரணங்களையும் தம் புதல்விகளில் சிலருக்குக் கொடுத்துவிட்டார். தனக்கு எதுவும் தரவில்லை, வைக்கவும் இல்லை என்ற மனக்குறை புதல்வரான பழநியப்ப செட்டியாருக்கு இறுதிவரையிலும் இருந்தது அதனால், அவர் இயற்றிய பாடல்களை சேகரித்து வைத்துக் கொள்வதிலும், அவரைப் பற்றிய நிகழ்ச்சிகளை எழுதி வைத்துக்கொள்வதிலும் அவ்வளவு ஆர்வம் இல்லாமல் இருந்து விட்டார்.

நாகப்ப செட்டியார் இறுதிநாள்வரை உடல் நலத்தோடேயே வாழ்ந்தார். எந்த நோயும் அவரை அணுகவில்லை.

அவர் எழுபத்து ஏழு ஆண்டுகள் நிறை வாழ்வு வாழ்ந்தார். அவருடைய காலம் 1855-1932. அப்பொழுது எனக்கு வயது பன்னிரண்டு.

நாகப்ப செட்டியார் தம்முடைய இறுதிநாளை அறிந்து வைத்திருந்தார் என்பது உண்மை. ஆனால், அதை யாரிடமும் கூறவில்லை. தம் மனைவியிடம் கூட தெரிவிக்கவில்லை.

30/3

அவருடைய உயிர் பிரிவதற்கு முதல் நாள் புதன் கிழமை. எண்ணெய்க் குளியல் முடித்து, தம்முடைய இரண்டாவது மகள் வீட்டுக்குச் சென்று பகல் உணவை முடித்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினார்.

இரவு 11 மணிக்கு, தம்மனைவியைக் கூப்பிட்டு, "நாளை என்னால் பேச இயலாது; ஏதேனும் கேட்க வேண்டுமானால், இப்பொழுதே கேள்" என்றார் நாகப்ப செட்டியார். மனைவியோ, "உளறாமல் படுத்துக் கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டாள். அவரோ மௌன மாகப் படுத்துவிட்டார்.

மறுநாள் வியாழக்கிழமை காலையில் வித்துவான் நாகப்ப செட்டியார் எழுந்திருக்கவில்லை. படுத்தபடியே, விழித்துக் கொண்டிருந்தார். ஆனால், பேசவே இல்லை. பகல் 12 மணிக்கு உயிர்பிரிந்தது. அப்பொழுது, அந்த இடத்திலே நான் இருந்தேன்; பார்த்தேன் எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது.

முதல் நாள் இரவு நிகழ்ந்ததை என் தந்தையார் என்னிடமும், மற்றும் சிலரிடமும் கூறினார். அன்று நிகழ்ந்த உரையாடல் அவர்காதில் விழுந்ததாம்.

ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளாக, வித்துவான் நாகப்ப செட்டியார் அவர்களின் சமகாலத்தில் வாழ்ந்த வர்களையும் மற்றவர்களையும் நேரிலும் கடித மூலமா கவும் விசாரித்து வந்தேன். அவர்களில் சிலர் தங்களுக்குத் தெரிந்தவற்றை கூறினார்கள். வேறு சிலர், "வித்துவான் நாகப்ப செட்டியார் அவர்களைப் பார்த்திருக்கிறோம்; பேசியுள்ளோம்; பாட்டு எழுதுவார்கள்; அவர்களுக்கு வாக்குப் பலிதம் உண்டு. ஆனால், பாடல்கள் எதுவும் நினைவில்லை; குறிப்புகளும் கிடையாது." என்று கூறினார்கள்.

மற்றும், வித்துவான் நாகப்ப செட்டியார் அவர்கள் தம் தந்தையார் அவர்களைப் பற்றி 1902ல் அச்சிட்டு

வெளியிட்ட நூலையும் இத்துடன் பின்னிணைப்பாக இணைத்துள்ளேன். அதில், சென்னை, டாக்டர் சண்முகக் கவிராயர் இயற்றிய 'தோத்திரப் பாக்களும்' அடங்கி யுள்ளன.

இந்நூலை படித்துப் பார்த்து இலக்கணப் பிழை களைத் திருத்திக் கொடுத்த டாக்டர் சுப. அண்ணாமலை அவர்களுக்கு நன்றி.

இயன்றவரை சேகரித்து, தொகுத்து, வித்துவான் நாகப்ப செட்டியார் அவர்களின் நினைவாகப் பணிவோடு இச்சிறு நூலை வெளியிடுகிறேன்.

முல்லை பிஎல். முத்தையா

சென்னை
1-7-1997

# அறப்பணி தொடர்பான விவரம்

தேவகோட்டை திருப்பத்தூர் சாலையில். ஸ்ரீ சுப்பிர மணிய செட்டியார் என்னும் வயி. கும. குப்பான் செட்டியார் எனக் காரணப் பெயர் எய்திய சுப்பிரமணிய குரு 1862 ல் தனிப்பட்ட முறையில் குருபூஜை மடம் நிறுவி, நந்தவனம் ஏற்படுத்தி, திருநாவுக்கரசர், ஞான சம்பந்தர், சுந்தரமூர்த்தி, மாணிக்கவாசகர், சேக்கிழார் மற்றும் வேலாயுதம் பஞ்சலோகத்தால் அமைத்து பண்டாரத்தை நியமித்து நாள்தோறும் அபிஷேக, ஆராதனைகள் செய்துவரப் பெற்றது.

ஆண்டுதோறும் சமயசாரியார்களுக்குச் சேக்கிழார் உள்பட அவரவர் திருநாளில் குருபூஜை நடத்தி ஏழை, எளியவர்களுக்கு அன்னம் வழங்கி வந்தனர்.

மடாலயத்தின் உத்தேச மதிப்பு, தோற்றுவித்த காலத்தில் ரூ 50,000.

மடத்தின் பராமரிப்புக்கும் குருபூஜை விழாக்களுக்கும் குறிப்பிட்ட வைப்புத்தொகை' இரு உறவினர்களிடமும், சமூகத்தார் இருவரிடமும் கொடுத்து வைக்கப் பெற்றிருந் தது. அவர்கள் அத் தொகையை ஏப்பம் இட்டு விட்டனர். ஆயினும், என் தந்தையார் பழநியப்பச் செட்டியார் தம் சுய முயற்சியால் குருபூஜைகள் நடத்தி மடத்தைப் பராமரித்து வந்தார்.

1952 ல் என் தந்தையார் காலமான பின் தொடர்ந்து நான் 1965 வரை நடத்தி வந்தேன். பின்னர், யாவும் நின்றுவிட்டன.

என் பாட்டனார் வித்துவான் நாகப்பச் செட்டியார் பல்வேறு சந்தர்ப்பங்களில், பாடிய சுவையான வெண் பாக்களைச் சேகரித்து விளக்கத்தோடு அச்சிட ஏற்பாடு செய்துள்ளேன்.

1964 ல் என் பாட்டானாரை அடியொற்றி சைவ சமயப் பற்றுடன் ஆண்டுதோறும் தேவகோட்டை கந்தர் சஷ்டி விழாவில் திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி, சத்துரு சங்கார வேல் பதிகம், சுப்பிரமணியர் அகவல் ஆகிய நூல்களை தெளிவுரையுடன் 2,000 படிகள் அச்சிட்டு இலவசமாக வழங்கி வந்தேன். மேற்படி சேவையை திருப்புகழ்மணி கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் பாராட்டி வாழ்த்துரை வழங்கியுள்ளார்கள்.

முல்லை பிஎல். முத்தையா

# வித்துவான் நாகப்ப செட்டியார் பாடல்கள்

## 1. தருமசீலன் நூலுக்குச் சாற்றுக்கவி

தேவகோட்டை, சொக்கலிங்கம் செட்டியார் மகன் சுந்தரேசன் செட்டியார் 'தரும சீலன்' என்னும் நவீனம் எழுதி, அச்சிட்டு வெளியிட்டார். அந்நூலுக்குச் 'சாற்றுக்கவி' இயற்றிக் கொடுத்துள்ளார் வித்துவான் நாகப்ப செட்டியார். மேற்படி நூலை, நான் 1938ல் பார்த்தேன். அதில், ''தேவகோட்டை வித்துவான் நாகப்ப செட்டியார் அவர்கள் இயற்றிய சாற்றுக்கவி'' என்று குறிப்பிடப் பட்டிருந்தது.

**முன்னோர் மொழிந்த மொழிபலவும் தன்மதியும்**
**இந்நூலில் சேர இசை வித்தான் — நன்னயமாய்த்**
**தேவை வணிக சிகாமணி சொக்கலிங்க**
**மாவலனாம் சுந்தரேசமால்**

## 2. மழை நின்றது!

தேவகோட்டை மெய்யப்பன் என்பவருக்குத் திருமண நாள், திருப்பூட்டுவதற்காக பெண் வீட்டுக்குப் போக வேண்டும். அப்பொழுது பெருமழை பெய்கிறது. அங்கே வித்துவான் நாகப்ப செட்டியார் இருந்தார். அவரிடம், ''ஐயா, மழை நிற்க, ஒரு பாட்டு இயற்றுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார் ஒருவர். அவரும் பாட்டு இயற்றினார் மழையும் நின்று விட்டது.

**தாரிலங்கும் தேவை வணிகர் கொண்டாடும்**
**சீரி லங்கும் ஐங்கரத்துத் தெய்வமே — கூறுமொழி**
**மாரிதனை மெய்யப்பன் மன்றல் வரை**
**வாரிதனில் பெய்க மழை.**

## 3. உத்தமருக்கு உதவுக

பொருள் உதவி கோருபவர்கள், நாட்டுக் கோட்டை நகரத்தார் தொழில்புரியும் ஊர்களுக்கு, சம்பந்தம் பட்டவர்களிடமிருந்து, அறிமுக — உதவிக் கடிதம் வாங்கிச் சென்று, பொருள் பெறுவது வழக்கம் ஒருவர் வட இந்தியாவுக்குச் செல்ல விரும்பி, பல ஊர்களுக்குக் கடிதங்கள் பெற்றார் அப்படியே. வங்காளத்துக்குப் போவதற்காக வித்துவான் நாகப்ப செட்டியாரிடம் அறிமுகக் கடிதம் கேட்டார் வங்காளத்தில் கதிரேசன் செட்டியார் என்பவர் தொழிலில் ஈடுபட்டு இருந்தார். அவர் வித்துவான் நாகப்ப செட்டியாருக்கு நண்பர். அவருக்கு எழுதிக் கொடுத்ததே கீழ்க்காணும் பாடல்.

**உத்தமர்க்கு ஒன்று ஈயின் அது ஒன்று பத்து நூறு என்று**
**எத்திறத்து நூலும் இயம்புதலால் — மித்திரரில்**
**சொல் தவறா நம் கண் சுகுணா கதிரேசா**
**கற்றறிவாய் நீ இதனைக் காண்.**

## 4. ஈசன் நடம்புரியும் கோயில்

காரைக்குடிக்கு அருகில் அரியக்குடி என்னும் சிற்றூர் உள்ளது. அங்கே கிருஷ்ணன் கோவில் ஒன்று இருக்கிறது ஆனால், சிவன் கோயில் ஒன்றை நிறுவ, அந்த ஊர் நகரத்தார்கள் முயன்று — தொடங்கினார்கள். அவர்கள் கேட்டுக் கொண்டதற்கு இணங்க வித்துவான் நாகப்ப செட்டியார் பாடிய பாடல்.

**நரியைப் பரிசெய்த நாதன் கருணை**
**அரியக்குடிக்குமே ஆக — துரியங்**
**கடந்த மணிவண்ணா காகுத்தா ஈசன்**
**நடம்புரியும் கோயிலொன்று நாட்டு.**

## 5. குருவுக்குச் சாற்றுக்கவி

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் மாணவர் திருவாரூர் கனகசபை அய்யர். அவரிடம் கல்வி பயின்றார் வித்துவான் நாகப்ப செட்டியார் மேற்படி கனகசபை அய்யர் அவர்கள், ''திருவாரூர்ச் சிலேடை வெண்பா'' என்ற நூலை இயற்றினார். அந் நூலை தம் பொருட் செலவில் அச்சிட்டு வெளியிட்டார் வித்துவான் நாகப்ப செட்டியார். மேற்படி நூலுக்கு 'சாற்றுக்கவி'யும் வழங்கினார்.

**திருவாரு ருக்குச் சிலேடை வெண்பாச் செய்தான்**
**குருவாய் எனக்கெழுந்த கோமான் — ஒருவாது**
**அனகமமை கூறை நகர்வீர சைவன்**
**கனகசபாபதி மால்காண்.**

## 6. பேரை விற்ற மகன்

சத்திரம் கட்டிவைத்தார் ஒருவர். அவருடைய வீட்டுக்குச் 'சத்திரத்தார் வீடு' என்ற காரணப் பெயர் உண்டாயிற்று. அக்காலத்தில், லேவாதேவி செய்யும் நகரத்தார்களுக்கு கடன் கொடுத்து, குறைந்தவட்டி பெறுவது நகரத்தார் வழக்கம். வித்துவான் நாகப்ப செட்டியார் தன்னுடைய மகளிள் ஸ்ரீதனப் பணத்தைச் சத்திரத்தார் வீட்டில் கொடுத்திருந்தார். அவரைப் போல் பலரும் கொடுத்திருந்தார்கள். ஆனால், சத்திரத் தார் மகன் பணத்தை ஒதுக்கிவைத்துக் கொண்டு, கடன் கொடுத்தவர்களுக்குக் கையை விரித்து விட்டார். அப்போது. வித்துவான் நாகப்ப செட்டியார் மனம் வெதும்பிப் பாடிய பாடல்.

**கையடக்கம் செய்தான் கடன் கொடுத்தோர் யாவரையும்**
**ஐயோ எனக் கதற ஆக்கினான் — பையவே**
**சத்திரத்துப் பேரினை விற்றான்காண் சண்டாளன்**
**புத்திரனாய் வந்து பிறந்து.**

## 7. வஞ்சகமாய் வந்தான்

வித்துவான் நாகப்ப செட்டியார் இரத்தின வியாபாரமும் செய்தவர். செல்லப்பன் என்பவர் வந்து மட்டரகமான இரத்தினத்தைக் கொடுத்துப் பணம் பெற்றுச் சென்று விட்டார். இரத்தினத்தின் தரத்தைப் பிறகே அறிந்தார் நாகப்ப செட்டியார். ஒரு பாடலுடன் அந்த இரத்தினத்தை செல்லப்பனுக்கு அனுப்பிவைத்தார் செட்டியார். செல்லப்பன் பயந்து, தன் குற்றத்தை உணர்ந்து உடனே வேறு இரத்தினத்தைக் கொண்டுவந்து கொடுத்து விட்டார் கீழே காண்பது அந்தப் பாடலே!

**பிஞ்சே உமிசம் பெரிதும் பலக்குறை வாய்**
**வஞ்சகத்தைக் கைக்கொண்டு வந்தாய் நீ — மிஞ்சியுனை**
**நம்பக் குறைரத்னம் தந்தாயே செல்லப்பா**
**வம்பின்றி வேறனுப்பிவை.**

## 8. வாக்குத் தவறியது ஏன்?

தமிழ் அறிஞர்கள் சிலர், தமிழ் அன்பர் ஒருவருடைய இல்லத்தில் தினமும் கூடி உரையாடுவது வழக்கம். "தினமும் நீங்கள் இங்கே வரும் பொழுது, வெற்றிலை பாககு மட்டுமே என்னால் தர இயலும்" என்று கூறி, அவ்வாறே வழங்கிக் கொண்டிருந்தார். அந்தவீட்டுக்காரர். ஒரு நாள் அதையும் அவர் வழங்க வில்லை. அப்பொழுது. வித்துவான் நாகப்ப செட்டியார் கீழ்க் காணும் ஈரடிச் செய்யுளை இயற்றினார்.

**வெற்றிலையும் நற்பாக்கும் வேண்டுமட்டும் ஈவன் என்ற**
**சொற்றவற லான வகை சொல்லு.**

## 9. அமுதத்தைப் போற்று

மாயூரம் — கூறைநாட்டில், வித்துவான் நாகப்ப செட்டியார் வாணிபம் செய்து கொண்டிருந்தார். அவரிடம் மாவலூர் கந்தசாமி என்பவர் கணக்கராக இருந்தார். நாகப்ப செட்டியார் சில நாட்கள் கந்தசாமி வீட்டில் தங்கி இருந்திருந்தார். கந்தசாமியின் தாய் அளித்த உணவைப் புகழ்ந்து கீழ்காணும் பாடலைப் பாடினார்.

**வாய் மணக்கும் கைமணக்கும் மாவழுகந்தசாமி**
**தாய் நம்க்கு இட்டமுதத் தன்மையாம் — தூயமணிச்**
**சிற்றருசிச் சோறும் செயல் வளர்த்த நாற்கறியும்**
**புத்துருக்கு நெய்யும் எனப் போற்று**

## 10. மன்னர் அளித்த மரியாதை

வித்துவான் நாகப்ப செட்டியார் அவர்கள் ஒரு சமயம் இராமநாதபுரம் புலமை மிக்க சேதுபதி மன்னரைக் காணச் சென்றுள்ளார். அவருடைய எளிமையான உடை தோற்றத்தைக் கண்ட காவலர்கள் உள்ளே அனுமதிக்க மறுத்து விட்டனராம்.

அதற்காக, வித்துவான் நாகப்ப செட்டியார் சோர்வுற வில்லை மாலை வேளையில் மன்னர் உலாவும் இடத்தை அறிந்து அங்கே இருந்த சுவற்றில், கரியால் வெண்பா ஒன்றை எழுத அதில் 'காண இயலாமை'யையும் குறிப் பிட்டு, கீழே 'நாகப்பன் என்று' எழுதி வைத்து விட்டார்.

'மன்னர் உலாவும் போது பாடலைப்படித்து மகிழ்ந்து நாகப்பன் யார் என்று விசாரித்து அறிந்து, தேவகோட் டைக்கு வண்டி அனுப்பி வித்துவான் நாகப்ப செட்டி யாரை அழைத்து வரச் செய்து, உபசரித்து உரையாடி

மகிழ்ந்து சால்வையும் வெள்ளி பதக்கம் ஒன்றும் பரிசு அளித்து அனுப்பி வைத்திருக்கிறார்.

இந்த நிகழ்ச்சியை திரு. கருப்பன் செட்டியார் முதலான பலர் கூறக் கேட்டிருக்கிறேன். ஆனால் பாடல் எவருக்குமே நினைவு இல்லை. அக்காலத்தில் அச்சிடும் வசதியும் குறைவு. தமிழ்ப்பற்றும் ஆர்வம் உள்ளவர்களும் மிகமிகக் குறைவானவர்களே.

[குறிப்பு : இந்த நிகழ்ச்சி சம்பந்தமான வெண்பாவை அறிந்தவர்கள் அல்லது காண்பவர்கள் அன்பு கூர்ந்து எனக்கு அனுப்பி உதவினால் மிகவும் நன்றி உடையவனாக இருப்பேன் என்பதைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.]

## 11. சந்தையில் நெருப்பு

தேவகோட்டையில், கலங்காத கண்ட விநாயகர் கோயில் ஒன்று உள்ளது. அதைச் சேர்ந்த சந்தை ஒரு சமயம், நெருப்பு பற்றி எரிந்து விட்டது. அப்பொழுது வித்துவான் நாகப்ப செட்டியார் பாடிய பாடல்.

**சந்தை அநியாயம் சாலவும் காண்பதற்கு**
**நொாந்து நெருப்பினிடம் நுவன்றீரோ — முந்த**
**மனம்மறிய வேண்டாவோ மாதேவா, தேவை**
**கனங் கலங்காக் கண்டனே காண்.**

## 12. மோளையன் காளையன் மோதல்

மாயூரத்தில், மோளையன் செட்டி, காளையன் செட்டி என்ற சகோதரர்கள் தங்கள் சார்பாக, வித்துவான் நாகப்ப செட்டியார் அவர்களுக்கு உணவு

விடுதி நடத்தும் செட்டியார் ஒருவரிடம் விருந்து அளிக்க ஏற்பாடு செய்து இருந்தார்கள். நாகப்ப செட்டியார் விருந்துக்குப் போனதும். 'உணவு இல்லை' என்று கூறி விட்டார் பொறாமை கொண்ட விடுதியாளர். செட்டியார் பசியோடு திரும்பினார். அதைக் கண்ட காளையனும் மோளையனும் 'அவருக்கு ஏன் உணவு அளிக்கவில்லை' என இருவரும் சச்சரவிட்டுக் கொண்டனர். அவர்களைப் பார்த்து வித்துவான் நாகப்ப செட்டியார் பாடினார்.

**சாதியபிமானம் தானும் சிறிதில்லா**
**தோசிப்பயல் வீட்டில் சொல்விருந்தை — யோசிக்கில்**
**மோளையனும் காளையனும் மோதிக்கொண்டாலுமே**
**தாளாது நம் மனதுதான்.**

## 13. பணத்தைத் தராத மாபாவி

அரு. அரு. அருணாசலம் செட்டியாரிடம் நாட்டுக் கோட்டை நகரத்தார் வழக்கப்படி குறைந்த வட்டிக்கு வித்துவான் நாகப்ப செட்டியார் பணம் கொடுத்து வைத்திருக்கிறார். பிறகு, மேற்படி தொகையை அருணாசலம் செட்டியார் திருப்பித் தராமல், ஏதோ நஷ்டம் என்று கூறி தொகையை ஏப்பம் விட்டு விட்டார். நஷ்டத்துக்கான காரணத்தைச் சொல்லும்படியும் அய்யர் மூலமும் தெரிவித்திருக்கிறார் வித்துவான் நாகப்ப செட்டியார். அருணாசலம் செட்டியார் எதற்கும் மசிய வில்லை. இறுதியில், பணத்தை இழந்த வருத்தத்தில், மனம் வெதும்பி 'மாபாவி' என்று பாடிவிட்டார் வித்து வான். அவரும் அப்படியே மாபாவி ஆகிவிட்டார்.

[இப்பொழுது நாம் எண்களுக்கு பயன்படுத்தும் எழுத்துகள் ரோமன் எழுத்துக்கள் ஆகும். எண்களுக்கு தமிழ் எழுத்துக்கள் உண்டு. அதாவது 8 க்கு 'அ' என்றும் 5 க்கு 'ரு' என்றும் தமிழிலே, அந்தக்காலத்திலே எழுது

வது வழக்கம். 'எட்டஞ்சு' என்றால்' அரு' என்று ஆகும். அதாவது அரு. அரு என்பதற்கு அதையே 'எட்டஞ்சு எட்டஞ்சு' என்று வித்துவான் நாகப்ப செட்டியார் குறிப்பிடுகிறார்.]

**எட்டஅஞ்சு எட்டஞ்சை எற்ற வருணாசலஞ்**
**செட்டியார் தம்மிடத்தே செப்பன்றேன்—நட்டவகை**
**அந்தணரைக் கொண்டும் அறிவித்தேன் மாபாவி**
**சொந்தம் இல்லை என்றான் துணிந்து.**

## 14. புலமைக்குக் கிடைத்த தீர்ப்பு

மாயூரம் முன்சீப் வேதநாயகம் பிள்ளை அவர்கள், கும்பகோணத்தில் மாவட்ட நீதிபதியாக இருந்த பொழுது வித்துவான் நாகப்ப செட்டியார் மாயரத்தில் வாணிபம் செய்து கொண்டிருந்தார். அவர் சம்பந்தமான கொடுக்கல் வாங்கல் பற்றிய வழக்கு ஒன்று, கும்பகோணத்தில் வேதநாயகம் பிள்ளை அவர்களிடத்தில் நடைபெற்றது. பிறகு, தீர்ப்புக் கூறப்பட்டது.

உண்மைக்குப் புறம்பாக தீர்ப்புக் கூறப்பட்டிருப்பதை அறிந்த வித்துவான் நாகப்ப செட்டியார் உடனே, "ஐயா முன்சீப்பே...என்று தொடங்கி, அதில் வழக்கையும் தீர்ப்பையும் குறிப்பிட்டு வெண்பா ஒன்று எழுதி, ஏவலாளர் மூலம் வேதநாயகம் பிள்ளை அவர்களிடம் கொடுக்கச் செய்திருக்கிறார்.

உடனே, வேதநாயகம் பிள்ளை அவர்கள், வித்துவான் நாகப்ப செட்டியாரை கூப்பிடச் செய்து, அந்த வழக்கு பற்றிய ஆதாரங்களைக் கேட்டுப் பெற்று, மறு விசாரணை செய்து, தீர்ப்பு வழங்கி இருக்கிறார்.

"உண்மைக்கும் புலமைக்கும் கிடைத்த மதிப்பு" என்று வித்துவான் நாகப்ப செட்டியார் கூறியுள்ளார். அதைத் தொடர்ந்து பிள்ளை அவர்களுக்கும் செட்டியார் அவர்

களுக்கும் தொடர்பு உண்டாக பல முறை சந்தித்துப் பேசிக் கொண்டிருந்திருக்கிறார்கள்.

இந்த நிகழ்ச்சியை வித்துவான் நாகப்ப செட்டியாரின் சகோதரர் கருப்பன் செட்டியார் எனக்குக் கூறினார் மேலும், பலர் கூறக் கேட்டிருக்கிறேன். ஆனால், அந்தப் பாடல் அவர்களுக்கு நினைவும் இல்லை அகப்படவும் இல்லை.

[குறிப்பு: அந்த வெண்பாவை அறிந்தவர்கள் தெரிந்தவர்கள் எனக்கு அனுப்பி வைப்பார்களானால் மிகவும் நன்றி உடையவனாக இருப்பேன் என்பதைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.]

## 15. பாவைக்கு எழுதிய பாட்டுக் கடிதம்

வித்துவான் நாகப்ப செட்டியார் அவர்கள், மாயூரம் கூறைநாட்டில் தம் தந்தையாருடன் வாணிபத்தில் ஈடு பட்டிருந்தார். ஏதோ அலுவலாக, தஞ்சாவூர் சென்றுள்ளார். அங்கே திருமதி ரெங்கம்மாள் வீட்டில் தங்கினார். மால் கிருஷ்ணய்யர், சக்காராம் சாயபு, கெங்காதர பாவலர் ஆகியோருடன் பழகி இருக்கிறார். அதன்பின்னர், ரெங்கம்மாள், தனக்கு ஒரு புடவையும் ஜரிகை ரவிக்கையும் வேண்டும் என்று வித்துவான் நாகப்ப செட்டியாரிடம் கேட்டிருக்கிறாள். அதற்கு வித்துவான் நாகப்ப செட்டியார் அவர்கள் கவிதையிலேயே கடிதம் எழுதியுள்ளார். மேற்படி கடிதத்தில் பல உண்மைகள் காணப் படுகின்றன. சுவையாகவும் உள்ளது. சொன்ன சொல்லைக் காப்பாற்றுவதாகவும் உறுதி கூறுகிறார்.

**சீரணி தஞ்சை சிறப்புடன் வடக்கு**
**பாரணி அலங்கப் பார்வையில் இருக்கும்**
**தாரணி ரெங்கம் தனக்கு எழுதுதல்**
**மாயூரகிரி மாநகர் தன்னில்**

யானும் தந்தையும் யாவரும் க்ஷேமம்
தானும் தயவுடன் எனக்கு
மேன்கை ஊர்வசி மேவிய மாதரும்
மானகாவிய மால் கிருஷ்ணய்யரும்
சக்காராம் சாயபு ஸ்கூல்
பக்கா கெங்காத பாவலரும்
ஒக்க உணர்வாய் உயர்ந்த சிநேகரும்
எல்லா விசேட இங்கித லீலைக்கும்
உல்லாசமாக எமக்கோர் கடிதத்
தெழுது வாய் யான் அவ்விடம் அலுவலாய்
இருக்கையில் தான் ஒரு சேலையும் ஜரி ரவிக்கையும்
போனவுடன் புந்தி மகிழ்வுற
போஸ்டாபீஸில் வங்கியில் வைத்து
வேணதனுப்பி வைக்கிறேன் என்றேன்
ஆனால் இப்போது அவசியம் அனுப்பின்
மான அவ்ஸ்தை வருமென நினைத்தேன்
ஏன் என விளம்பில் இனிதுடன் சொல்வேன்
நான்கு வருடத் தொரு தரம் நாட்டுக்கோட்டை
பாங்குடன் கணக்குப் பார்ப்பதும் உண்டு
பார்த்து பங்கு முதல் போல்
பாவகமாக எங்கள் பங்குக்கு
ஈவுபோல் வரும் புடைவைதனை
வர்த்தகருக்கு அனுப்பி அவர்தரும்
பணத்தைத் தவணைபோல் வாங்க சங்கர
நாராயணன் கோயில் சார்ந்த உற்சவத்துக்கு
இங்கிதமாக இன்னொரு மாதத்தில்
அங்ஙனம் வருவோம் அப்போது உனக்கு
சொன்ன மொழிக்குச் சோர்வு வராமல்
சன்னப்பப்பள தாளிச ரவியும்
வின்னமின்றி விடுத்தற்குரியன்
யான் விடுதற்குரியவை தன்னில் யாதொரு
மனக்குறை கொள்ள வேண்டா மாதோய்
எனைப் போல் வணிகர் எங்கணும் உண்டு.

**உனைப்போல் மாதர் ஒருவருமில்லை
இந்தக்கவியின் இங்கிதக் கடிதம்
வந்தவுடனே வதில் உரை செய்வாய்
வதில் வராவிடில் வங்கி அனுப்பக்
கதியுறா தெனக் கருத்துரை செய்வாய்
தயைமிகுந்த தனுர்மாதம்
தேனுறும் ஐந்தாம் தேதியின் மாதோய்.**

## தேவகோட்டை, தொண்டர் கரு. கதி. நாச்சியப்ப செட்டியார் 26-8-1967ல் எழுதிய கடிதம்

ஸ்ரீ முல்லை முத்தையா அவர்களுக்கு,

...மேலும் தகவல் ஏதும் தெரிந்தால் எழுதலாம் என்று இங்கு பலரை விசாரித்ததில் யாருக்கும் எதுவும் தெரியவில்லை. அநேகமாய் 1931 அல்லது 1932 பாட்டனார் அவர்கள் காலமான வருடமாக இருக்க வேண்டும் அல்லது ஒரு வருடம் முன்னோ பின்னோ இருக்கலாம்...... ஏதும் தெரிந்தால், உடனே எழுதுவேன். நான் இன்னும் பலரையும் சமயம் நேரும் போதெல்லாம் விசாரித்துக் கொண்டு தான் இருக்கிறேன்.

இவ்வூர் "மாணவர் சங்கம்" ஐந்தாவது ஆண்டு விழாவாக இருக்கலாம். அதற்கு தேவகோட்டை டிஸ்டிரிக்ட் முனுசீப் எ. ரங்கசாமி ஐயங்கார் தலைமை வகித்த போது ஒரு வாழ்த்து (வெண்பா) எழுதியிருந்தார்கள்.

பாட்டுகள் நீண்ட நாளைக்கு முன் உள்ளதாலும், எழுதி வைக்காததனாலும் ஞாபகம் உள்ளதை அப்படியே எழுதி அனுப்புகிறேன். நான் எழுதி அனுப்புவதில் பிழை இருக்கலாம். யாராவது தெரிந்த தமிழ் வித்துவானைக் கொண்டு திருத்திக் கொள்கிறது.

**மாணவர்தம் சங்கம் மகிழ்வெய்த பிர்மஸ்ரீ**
**தாணரங்க சாமி மால்தார் வேந்த.........**
**............காணரிய**
**தத்துவத்தை இன்னார்க்குச் சாதிக்க வந்ததுவும்**
**உற்ற ருத்ரோற்காரி என்றோது.**

தேவகோட்டை சொர்ண மூர்த்தி பெண் பாடசாலை முதல் ஆண்டு விழா தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள் தலைமையில் நடைபெற்றபோது ஒரு வெண்பா எழுதி இருந்தார்கள். ஞாபகத்தில் உள்ளதை எழுதுகிறேன்.

ஆட்விகள் நற்றமிழில் அன்புபெற சொர்ணமூர்த்தி
பெண்பாடசாலை ஒன்று பாவித்தான்.

## தேவகோட்டை, தங்கம், வெள்ளி நகைக் கடை உரிமையாளர், திரு. நா. நா. குழந்தைச்சாமி செட்டியார் 28-6-1965ல் எழுதிய கடிதம்

ஸ்ரீ முத்தையா செட்டியார் அவர்களுக்கு, தாங்கள் அனுப்பிய தபால் கிடைத்து விவரம் தெரிந்தேன்.

தங்கள் பாட்டனார் நாகப்ப செட்டியார் இரத்தின வியாபாரத்தில் ரொம்பப் பிரியப்பட்டவர்கள். யாரிடத்திலும் நம்பிக்கை கொள்ளும் சுபாவம் அப்படியிருக்கும் காலத்தில், புதுவயலிலிருந்து செல்லப்ப செட்டியார் என்ற ஒரு வியாபாரி ஒரு ஜதை சிகப்புக் கம்மலை நல்ல சரக்கு என்று விற்று விட்டாராம். அதற்குத் தொகை கொடுத்து வாங்கிய பிறகு, அதை வெளியே வேறு வியாபாரிகளிடம் காண்பித்ததில் அது போலிச் சரக்கு என்று கேள்விப்பட்டு அதற்கு வேறு பொருள் நல்லதாக அனுப்பிவைக்கும்படி ஒரு பாட்டு எழுதி மேற்படி கம்மலையும் அனுப்பி வைத்தார்களாம்.

அந்தக் கவியை செல்லப்ப செட்டியார் படித்துப் பார்த்த உடனே மேற்படி கம்மலைப் பெற்றுக் கொண்டு அதற்கு தான் வாங்கிய தொகையை வாபஸ் செய்து விட்டாராம்.

மற்றும் வேறு பாட்டுகள் எனக்குத் தெரியாது விசாரித்துப் பார்த்து தெரிந்தால் எழுதுகிறேன்.

௨

## புகழ்க் கடிதம்

உய்ப்போர்
**S. தியாகராஜ அய்யர்**
வித்வான் உயர் நிலைப்பள்ளி
மங்கலம் பேட்டை
**விருத்தாசலம் தாலுக்**

ஏற்போர்
திருவாளர் **வயி. ரும - நா -**
பழநியப்பச் செட்டியார்
அவர்கள் திருச்சமூகம்
தண்ணீர்ப் பந்தல்
**தேவகோட்டை**

உத்தம குணமும் சித்த சுத்தியும் பத்தி சிரத்தையும் பயக்கும் உதாரமும் அபார அறிவும் குபேரசம்பத்தும் ஸ்ரீ சண் முகப்பிரான் திண்ணருளால் மேற்மேலும் ஓங்க வேண்டும் என்று பிரார்த்தித்து எழுதியது.

நலன் நலன் அறிய அவா. நான் தங்களை நேரில் தெரிசித்து அளவாவுதல் இன்றியே கடிதம் எழுதியது.

**தங்கள் திருத்தாதையார், திருவாளர் நாகப்பச் செட்டியார் என்பவாகள் மாயவரம் கூறைநாட்டில் வதிந்த போது எங்கள் முன்னோரும் எனது மாதுலரும் ஆகிய திருவாளர் கனகசபை அய்யர் (வீரசைவர்) என்பவர் ஒருவர் இருந்தார்கள் அவர்கள் வித்வான் திரிசரபுரம் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை அவர்களிடம் கல்வி பயின்றவர்கள். அத்தகையராகிய வித்வான் கனகசபை அய்யர் அவர்களிடம் தங்கள் தந்தையார் கல்வி பயின்றார்கள்.**

விந்தையாக நினைக்கலாம். விரைவில் தங்களைக் காண விழைகின்றேன். கடவுள் கூட்டிவைப்பாராம்

நான் தங்களிடம் வரைந்து கொள்ளும் விண்ணப்பம் ஒன்று, அஃது மிக்க கீர்த்தி வாய்ந்தது. அழியாப் புகழது

தங்கள் முன்னோரின் பெருமையை விளக்குவது தமிழ் மொழிக்கும் தமிழ் நாட்டிற்கும் நன்மை பயப்பது.

அக் கனகசபை அய்யர் அவர்கள் "திருவாரூர்ச் சிலேடை வெண்பா" என்று ஒரு நூல் செய்துள்ளார்கள்" அத்தகைய நூல் தங்கள் தந்தையார் பொருட் செலவில் வெளிவந்துள்ளது. தங்கள் தந்தையாரும் அதற்குச் சாற்றுக் கவி இயற்றியிருக்கின்றார்கள்.

அப்புத்தகம் தங்களிடம் இருக்கலாம். தாங்களும் பார்த்திருக்கலாம். இப்போது அந்த 'திருவாரூர்ச் சிலேடை வெண்பா' என்னும் நூலுக்கு ஓர் குறிப்புரை எழுதி அச்சிட்டு வெளியிட உத்தேசம்.

இவ்விவரம் தங்களிடம் கலந்து கொள்ள எங்கள் விருப்பம். அப்புத்தகத்தை வெளிப்படுத்த சில மடாதிபதிகள் விரும்புகின்றார்கள். முதலில் தங்கள் பிதாவால் அச்சிட்டு வெளியிட்டதால் அதன் பெருமை நுங்களைச் சார்ந்தது.

இப்போது அது அச்சிடும் விஷயத்தில் உதவியோ அல்லது முழுப் பொறுப்பையுமோ தாங்கள் ஏற்றுக் கொள்வதானால் வேண்டிய ஏற்பாடு செய்யலாம் தாங்களுக்குச் சௌகரியம் உண்டு அல்லது இல்லை என்ற விபரந் தெரிவித்தால் நாங்கள் பிரபுக்களைப் பார்த்து வேண்டிய ஏற்பாடு செய்ய வேண்டும்.

ஆகையால், ஷெ விவரத்திற்கு தங்கள் அன்பார்ந்த பதில் வேண்டுகிறேன். தங்கள் குடும்பம் ஓங்குக. செல்வம் நிறைக. சந்ததி விளங்குக. தீர்க்க ஆயுளை உண்டாக்குக! ஆரோக திட சரீரமும் சிந்தித மனோரத சர்வாபீஷ்ட சித்தியும் சகலசம்பத்தும் ஓங்குக. சுபம் சுபம். சுபம்.

இங்ஙனம்.
**S. தியாகராஜ அய்யர்**
வித்வான்
*10 - 10 - 1952*

பின்னிணைப்பு

ஸ்ரீ சுப்பிரமணியஞ் செட்டியா ரென்னும்

**வயி. குமு. குப்பாஞ் செட்டியார்**

எனக் காரணப் பெயரெய்திய,

**சுப்பிரமணிய குருவினது**

தோத்திரப் பாக்களும்

**விதேக முத்திச் சாதனமும்**

இஃது

சென்னை டாக்டர்

சண்முகக் கவிராயரா லியற்றியதுடன்

**வித்துவான் வயி. குமு. நாகப்ப செட்டியார்**

தனது பிதா பிரிவாற்றாமையாற் சொல்லிய

**இரங்கற்பஞ்ச வெண்பாமாலையும்**

இன்னும் சில பாக்களு மடங்கியுள்ளன.

கும்பகோணம்

**நாஷனல் அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.**

1902.

# முகவுரை

இப்புண்ணிய சீலர் மதுரை ஜில்லா தேவக்கோட்டையிலுள்ள நாட்டுக்கோட்டை நகரவாசிகளாகிய வணிகப் பிரபுக்களுள் மாத்தூர் கோவில் கண்ணுடையாரென்னும் பிரிவினர்

இவரதியற்கைப் பெயர் சுப்பிரமணியஞ் செட்டியார், செயற்கைப் பெயர், வயி. குமு. குப்பாஞ்செட்டியார், காரணப்பெயர் சுப்பிரமணிய குரு, இவரெழுபத்திரண்டாயுளுடையாராக விருந்தவர். அறுபது வருட காலங்களாக இல்லற ஞானியை யொத்திருந்ததன்றியும் ஆன்றோராற் கூறிய அறவொழுக்கங்களின்று மோதாதுணர்ந்தவர்

நிர்வளம் நிலவளங்களில் குன்றாது தெய்வத் தன்மை நிறைந்துள்ள, மாயூரத்தைச் சார்ந்த, கூறையம் பதியிற் பொருளீட்டல் முதலிய வியாபாரங்களையுண்மையோடு நடாத்தி வந்தவர். பிறர்மனம் புழுங்காமலுமிருந்தாரன்றியும புறங்கூறன் முதலிய குற்றங்களணுகாதவர், தான் பிறவிச் செல்வக்குடும்ப விற்பன்னராக விருந்து மிடம்ப முதலிய மதமாச்சரியமற்றிருந்தவர், தனது முத்திச்சாதன காலத்தேர்ந்துரைத்த வரயிலும் பிறர் தன்னையின்னானென்றறிந்து கொள்ளாத முயற்சியுடனிருந்தவர், வீச்சுடன் பிள்ளைப் பூச்சி சேற்றில் விழுந்தழுந்தினாலும் அமலமாயிருப்பதைப் போல உள்ளும் புறமுமொத்தாமலகக் கனிபோன்றிருந்தவர்.

மேலுமிவர் தேவையம்பதியில், நந்தவனம், திருமடாலயம், கூபம், தண்ணீர்ப்பந்தல், குருபூசை முதலிய நல்லறங்களையும் நடாத்தி வந்தவர்.

இவ்வாறான உத்தம கருமங்களிற்றுணிந்தும். முயற்சித்தும் இல்லற தருமத்தை நடத்தி, பிறருக்குத் தெரிவிப்பான் பொருட்டுச் சொல்லாமற் சொல்லியும், காட்டாமற் காட்டியும் நாட்கழிந்த இம்மகானுடைய வனுபவங்களையும் குணசீலங்களையும், சுமார் பன்னிரண்டு வருடங்களாகத் தெரிந்த நான், சில தோத்திரப்பாக்களாக விச்சிறிய புத்தகத்தை வரைத்தேனாதலால்.

பன்னூற் கேள்வியிற்சிறந்து தொன்னூ லாராய்ச்சியுள்ள கனவான்களெனதவாவினது தரத்திற்கிரங்கிப் புறங்கூறார் களென்பதெனது திண்ணமாதலினாலிதனை யச்சிடத் துணிந்தனன்.

இங்ஙனம்

கும்பகோணம் — சென்னை

8-6-1902 — **சண்முகக் கவிராயன்**



சிவமயம்

## காப்பு நேரிசை வெண்பா

பூவார் நறுங்கொன்றைப் புண்ணியன்றன்
பொன்னடிக்கீழ்
மேவாருஞ் சுப்பிரமணிய வேள்சென்ற—பாவாரும்
நாடோத் திரஞ்செய்ய நால்வாய் கணபதிதன்
றாடுணையாய் நிற்குந் தனித்து

## நேரிசை வெண்பா

கலியாப்த மையா யிரத்திரண்டிற் காணும்
வலியாம் பிலவமதி மீனம்—விலியில்
விருத்தியார் சுப்ரமண்ய வேண்முத் தியினிற்
றிருத்தமுடன் சென்றான் சிறந்தது.

## விலி—பூராடம்

## ஆசிரிய விருத்தம்

சொல்லாரு மணிபிலவ வருடான் மீனமதி
துன்னுபன் னொன்பா னெனுந்
துதிதிகதி தேய்பக்க மட்டமி யெனுந் திகதி
தொடருமங் காரகதினம்

மல்லாரு நாழிகையி லிருபஃது பூராட
மன்கடக லககினத்தில்
மதிநேரு மாயுளெழு பானிரண் டிற்குமேல்
மாதேவ கோட்டை யணின்

வில்லாரு மணிகூறை நாடொளிரும் வித்தகன்
மேலொர்க டுதிசீலன் மெய்வணிகர் குலதீபன்
விமலசுப் பிரமணிய வேள்.

இல்லார்ந்த மாதவம் வாய்மைபொறை வாய்ந்துதன
தியல் சோதிசேர்க்கை தேர்ந்தங்
கேமமொடு பூமாரியிமையவர் சொரிந்துஜய
வெனமோக்க முற்றனைரோ.

## அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மணிகொழிக்குங் கடன்மருங்கிற் றலமகட்கு
மார்பகத்தின் மணிச்சூட் டென்ன
அணிகொழிக்குந் தமிடேரும் புலமைச்சால்
தனவணிக ரதிகங் காட்டிப்
பணிகொழிக்கும் விரகலா நதிவான கங்கையின்றன்
படிமை காட்டுங்
கணிகொழிக்கும் பல்வளமல் குந்தேவர்
கோட்டையெனக் கதிக்கு நாட்டில்

மண்ணுக்கு ளுயர் நகர மதிலுளா
ரனைவர்களு மாழ்கிச் சோர
கண்ணுக்குண் மணியனையான் நீதியுளான்
கண்ணியன் காருண்ய புண்யன்
பண்ணுக்கு ளுயர்தமிழ் விற்பனஞ் சேரு
நாகப்ப பாக்கிய னொத்தங்
கெண்ணுக்குட் சிறந்தயிய வறியும் பின்னோன்
றனையிங்கு மீன்றதன்றி

நன்மைகெழு பழியொழுகும் புரைதபுசீர்
சால்பயிர்ப்பு மடநாணாதி
தன்மையெழு தரியவனப் பமருமருந்
ததிமகளின் சார்பினோடும்
தொன்மைநின தருணோக்கின் றொடர்பிலாத்
தெளபுத்தரர் சோர்ந்துவாடி
இன்மையுளார் போல்வெதும்ப வின்னொளித்தா
யுத்தமனே யிரும்பபூத ந்தோ

வாக்குமன மொன்றியெழிற் பொன்னிநதி படிந்தாடி
மலர்கள் கொய்து
தேக்குமரம் பொரு ணாடி யர்ச்சித்து
மனம்வா க்குக் காயஞ் சேர்த்துப்
போக்குவர வற்றவிட மேகுநா ளதைப்புகன்று
புகுந்தா யன்னோர்
காக்குமிகுங் கண்கலக்கந் தீர்ந்ததுன்னது
திருமுகத்தைக் காண்பதென்னோ

ஊனமுறும் பவக்காட்டி லுழல்மாந்த
ரெல்லோரு முய்யும் வண்ணம்
ஞானமுறுங் குருபூசை மடாலயமு
மரன்பூசை நன்னீர்ப்பந்தல்
ஆனகமா மெனப்பணித்த வமுதமே
யாசிரியத் தன்மையார்ந்து
போனகமுண் விருந்தென்ன வானகத்திற்
போய்ப் புகுந்தாய் புதுமையன்றோ

## தோத்திரப்பா

இந்திராஜா லங்களிவ் வுலகவாழ் வென்னநு
வியற்கையி லறிந்தகுருவே
தந்திரம் தாகமழ லைப்பூச்சி கமலயிலை
சலமென விருந்த குருவே
இந்திரவி காலங்களென்போது மரனடி
யிணைப்போதை யேற்று குருவே
சுந்தரமி லங்கு சுப்பிரமணிய நின்னருட்
டுணைந்து னருள்புரிவையே

பொன்னையும் மண்ணையும் பூவையும் போற்றுவை
யெனக்கண்ட புன்மாந்தர்கள்
நின்னையும் நினதுண்மை நேசத்தையுங் கண்டு
நிற்கவேல் லார்களெவர்காண்

தன்னையின் னானெனக்கண்ட நின் பெருமையைத்
தான்கண்ட பேரறிவர்காண்
அன்னையைப் போன்ற சுப்பிரமணிய தேசிகா
யையநின் கழல் வாழ்கவே

நத்தையி லிருக்குமணி மாணிமுத்தினை யெவர்க
ளவர்களறி வார்களது போல்
நித்த முன்னருகிருந்திடுமவ ரல்லாது
நின்மூட ரறிவார்களோ
கத்தசா தகமுள்ள நினதன்பி னுண்மையைத்
தொண்டரறி வார்கள் கண்டாய்
அத்தனே முத்தசுப் பிரமணிய நின்னருட்
கண்சாத்தி யருள்கவென்றே—

பொருளாக வுலகத்தை பொய்யெனக்காட்டாது
பொற்பாக நின்ற குருவே
அருளான தன்மைதனை யாருமறியாதபடி
யகமற் றிருந்த குருவே
தெருளான நிலைநின்று செமகையிற் காட்டாது
தேறியொளி யான குருவே
மருளற்ற வெங்கள்சுப் பிரமணிய நின்னடிகள்
வாழ்க வருளோங்க வென்றே.

## வேறு

அற்புத வெனதணி நேசத்துருவே
யன்பின் மிகுத்தொளிர் கண்மணியே
புற்பத வுலகதை நீத்துக் கற்பக
நாட்டிற் புகுதரு புண்ணியனே
பொற்புறு ஞானப் பொலிவே புலவர்கள்
புகழ்ந்து போற்றிய சிவவடிவாம்
உற்பவ வொளியே சுப்பிரமணியகுரு
வுத்தம நின்னடி வாழியவே.

## தனதுபிதா பிரிவாற்றாமையாற் சொல்லிய இரங்கற்பஞ்சக வெண்பாமாலை

சம்போ சிவவென்னத் தான்றவத்திற் றோத்திரிக்குங்
கெம்பீர வாய்மையனே கேள்வியனே — செம்மையணி
தோளாவென் முத்தே துரைத்தனமே யெங்கொளித்தீர்
தாளாதென் சிந்தைதந் தையே.

கொஞ்சநே ரத்திலெனைக் கூவியழைப் பீர்பிரியீர்
மஞ்சனத்தி லேற்றி மடியில்வைப்பீர் — தஞ்சமெனத்
தாளாள ரேங்கத் தனிகீர்த்தி யோடொளித்தீர்
தாளாதெல் சிந்தைதந் தையே.

ஆரை யழைப்பேன் அருமையுடன் பார்த்திருப்பேன்
சீரை யுரைப்பேன் றெளியுகிலேன் — வீரையிலாக்
கேளாருஞ் சங்கத்திற் கேண்மைபெறச் சென்றீரோ
தாளாதென் சிந்தைதந் தையே.

கற்பகமே செஞ்சொற் கனிரசமே வானெழுந்த
பொற்பகமே யெல்லோர்க்கும் புண்ணியமே- சொற்பிசகா
நாளாக் கழித்த வெனக்கோர்சொனவி லாதொளித்தீர்
தாளாதென் சிந்தைதந் தையே.

சட்டமதை யிம்பர் கட்குத் தந்தும்பர் தங்கட்குப்
பொட்டனவே சீருரைக்கப் போனீரோ — திட்டமுள்ள
தாளாண்மை யுள்ளவுந்தன் சந்த நெறிநினைக்கிற்,
றாளாதென் சிந்தைதந் தையே.

### வேறு

மாதவமா ரன்னைபிதா மாதிறத்தில் வந்துதித்துப்
பேதமற விவ்வுலகின் பெட்டார்ந்து — சோதித்னில்
சென்னா ளறிந்துரைத்த செல்வனே தந்தையே
என்னாம் நினைப்பிரிந்த வெற்கு.

சத்தியமும் நீதியுமே சாற்றுவி ... யானறியாப்
புத்திகளை நாடோறும் போதிப்பீர் — இத்தரையில்
வேறுபுகல் காணா வினையேன் றவப்பயனை
கூறுசெய்து சென்றனையென் கூறு.

### அறுசீர்க் கழி நெடிலாசிரிய விருத்தம்

இப்புவியில் நின்மாற்ற மிசையுமனம் விசைந்
தெழுந்தங்கியல்பா யாங்கள்
செப்பினதோர் மொழியதனைச் சிரஞ்சாத்தி
செய்த தொண்டின் சீர்தேற்றத்தைக்
கைப்பறவே கண்டிருந்தும் நாங்கள்செய்த
நற்றொண்டைக் கடிந்து சென்றாய்
அப்பெரிய புண்ணியத்தை நாங்களினி
யடையாத தமைப்போ வைய

### வாழி விருத்தம்

பூவாழ்க பொன்னுதவும் பொறிவாழ்க சைவநெறி
பொலிந்து வாழ்க
கோவாழ்க மாதேவர் கோட்டைநக ரத்தார்கள்
குலவி லாழ்க
பாவாழ்க யிந்நூலைப் படிப்பவருங் கேட்பவரும்
பயன்சொன் னோரும்
நாவாண்ட சுப்ரமண்ய குருநாதன் குலங்களெல்லாம்
நலமாய் வாழ்க.

(முற்றிற்று)

**VIKRAMADITHAN KADHAI (TAMIL)**

**By MULLAI MUTHIAH**

The stories of emperor vikramadiya presented in this reprint will fascinate contemporary readers as they had done generations of readers and listerers over a thousand years. The author informs us that they were based on a rare manuscript preserved by his grand father vidwan Nagappa chettiar who was a close friend of Maha vidwan meenakshi sundaram pillai and mayuram vedanayagam pillai.

20-1-87
The Hindu



☐ 1987-ல் குளித்தலை தமிழ்க் கா சுவின் நூற்றாண்டு விழாவில் 'பாவேந்தர் சீர்பரவுவார்' என்ற பட்டத்தை வழங்கியது.

☐ 1990-ல் தமிழக அரசும், திருச்சி பாரதிதாசன் பல்கலையும் இணைந்து நடத்திய பாவேந்தர் நூற்றாண்டு தொடக்க விழாவில் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் முல்லை முத்தையாவின் பதிப்புப் பணிகளைப் பாராட்டி ரூ 10,000/- பரிசும் 'பாவேந்தர் விருதும்' பட்டாடையும் அணிவித்து கௌரவித்தார்.

☐ 1991-ல் திருச்சி நகரத்தார் சங்கம் 'பாவேந்தர் விருது' பெற்றமைக்காக பாராட்டு விழா நடத்தியது.

☐ 1993-ல் நிதிஅமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் வி.ஜி.பி. விருதும் ரூ 1000/- பரிசும் வழங்கி கௌரவித்தார்.

☐ 1993-ல் 'வள்ளுவர் வழி' வாசகர் வட்டம் நடத்திய விழாவில் தஞ்சைப் பல்கலை முன்னாள் துணைவேந்தர் சி. பாலசுப்பிரமணியம், முல்லை பி எல். முத்தையாவுக்கு 'திருவள்ளுவர் சீர்பரவுவார்' என்ற விருதை வழங்கினார்.

☐ 1994-ல் உலகத் திருக்குறள் உயராய்வு மையம் சென்னையில் நடத்திய விழாவில் முல்லை பி எல் முத்தையாவுக்கு 'குறள் ஆய்வுச் செம்மல்' எனும் திருக்குறள் விருது வழங்கிச் சிறப்பித்தார்கள்.

திருப்புகழ்மணி
T.M. கிருஷ்ணஸ்வாமி ஐயர்

## வாழ்த்துரை

ஆண்டவன் பக்தி உபயகுலதீபம் மானிட குலத்தையும் தெய்வீக குலத்தையும் ஒருங்கே வாழ்விக்கும் வல்லிதேவசேனா ஸமேத முருகன் ஆங்காங்கே அன்பரை தூண்டிவிட்டு அவர்கள் கைங்கரிய பூர்வமாக தன் அருளை பரப்புகின்றான். உலகத்தை ரக்ஷிக்க வேண்டி நக்கீரரை தடுத்தாட்கொண்ட செம்மல் இப்போது சிரஞ்சீவி முத்தையா மூலம் ''திருமுருகாற்றுப்படை'' எனும் முருகன் கருணை சமுத்திரத்தையும் ஆனந்த அலைகளையும் அன்பர்கள்மேல் திருப்புகிறான் போலும். அவன் இச்சையே நம் கருமம் பந்தமற்ற கருமம். இதில் ஈஸ்வரார்ப்புணமாய் முயற்சி செய்து இந்நூலை பரப்பும் சத்காரியம் ஸ்ரீ முத்தையாவை மாத்திரம் அன்று முருக பக்தர்கள் யாவரையும் வாழ்விக்க செய்யும். இந்த முயற்சியை பார்த்து மகிழ்ச்சி அடைகின்றேன். என் அன்பு நிறைந்த ஆசிகள் உடன்நிற்குமாக!

3—11—59